உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வாயுசங்கிதை.

தெய்வீகம்பெற்ற

குலசேகரவரகுணராமபாண்டியர்

அருளிச்செய்தது.

இஃது,

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மபுரம்

ஸ்ரீ சிவஞானபாலையதேசிகராதீனத்துச்

சிதம்பரம்

## இராமலிங்கசுவாமிகளால்

பலபிரதிரூபங்களைக்கொண்டுபரிசோதித்து,

திருநெல்வேலிஜில்லா ஊற்றுமலைசமஸ்தானப்

வீரகேரளம்புதூர்

ஜமீன்தாரவர்களாகிய

இருதயாலயமருதப்பதேவரவர்களால்

சென்னை:

ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதிஸு ஆவணிமீ





உ

சிவசண்முகன்றுணை.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.



திருவளர்கமலத்திறைவனுங்காணுச் செஞ்சடைத்தனிமுதல்புரா ண, வருமறைத்தெளிவாம்வாயுசங்கிதையின்னமுதுகுதமிழினூலைத் தான், பரிதிவாட்டடக்கைப்பாண்டியகுலசேகரனணிபனிமலர்ப்பசுந் தார், வரகுணராமன்புவியெலாநிழற்றுமாலைவெண்கவிகைமீனவனே.



சிவமயம்.

# முகவுரை.

அநாதிமலமுத்தராகிய சிவபெருமான், அநாதிமல்பெத்தராகிய ஆன்மாக்கள் முத்தியின்பம் பெறும்பொருட்டு வேதசிவாகமங்களை அருளிச்செய்து, அவற்றின்வழி ஒழுகுவோர்க்கும் பிறர்க்கும் ஐயந்திரிபுகளணுகாவண்ணம், பின்னரும் மேற்கோளாக, அவ்வேதசிவாகமப் பொருள்களின்வழியொழுகி அநுபவமுதிர்ந்த ஆன்றோர் சரிதாதிகளை விளக்கித் திருநந்திதேவருக்குபதேசிக்கப்பட்டு, பரம்பரையாக வழங்கிய புராணங்கள் பதினெட்டு. அவற்றுள்ளே, சைவம் பவிடியம் மார்க்கண்டேயம் இலிங்கம் காந்தம் வராகம் வாமனம் மற்சம் கூர்மம் பிரமாண்டம் என்னும்பத்தும் சிவபுராணம்; காருடம் நாரதீயம் வைணவம் பாகவதம் என்னும்நான்கும் விஷ்ணுபுராணம்; பிரமம் பதுமம் என்னும்இரண்டும் பிரமபுராணம்; ஆக்கினேயம் அக்கினிபுராணம்; பிரமகைவர்த்தம் சூரியபுராணம்.

இவற்றுள்ளே, சிவபுராணம்பத்தில் முதன்மைபெற்றதாகிய சைவபுராணமென்பது பன்னிரண்டுசங்கிதைகளாகி இலக்ஷங்கிரந்தங்களையுடையது. இவற்றில் வித்தியேசுரசங்கிதை பதினாயிரங்கிரந்தமும், உருத்திரசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், விநாயகசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், உமாசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், மாதிருசங்கிதை எண்ணாயிரங்கிரந்தமும், ஏகாதசருத்திரசங்கிதை பதின்மூவாயிரங்கிரந்தமும், கைலாசசங்கிதை ஆறாயிரங்கிரந்தமும், சதருத்திரசங்கிதை மூவாயிரங்கிரந்தமும், கோடிருத்திரசங்கிதை ஒன்பதினாயிரங்கிரந்தமும், சகஸ்திரகோடிருத்திரசங்கிதை பதினோராயிரங்கிரந்தமும், தருமசங்கிதை பன்னீராயிரங்கிரந்தமும், வாயுசங்கிதை நாலாயிரங்கிரந்தமுமுடையன. இப்பன்னிரண்டுசங்கிதையில் வாயுசங்கிதை, பாண்டிநாட்டிலே அரசுபுரிந்து தெய்வீகம்பெற்ற குலசேகரவரகுணராம பாண்டியனென்பவரால் தமிழிலே மொழிபெயர்த்து அருளிச்செய்யப்பட்டது.

இது, சைவசமயிகள் முக்கியமாக ஆராய்தற்குரிய விடயங்களையுணர்த்தும் ஒருஅரியதிவ்வியநூலாதலின் இதை அச்சிடவேண்டுமென முயலுங்கால் பிரதியுபகரித்தவர்கள்:—

சிதம்பரம்.
சைவப்பிரகாசவித்தியாசாலைத்தலைவர்
ம-௱-ௗ-ஸ்ரீ சதாசிவப்பிள்ளையவர்கள் பிரதி ௩

ஷை வித்தியாசாலையுபாத்தியாயர்
,, - குமாரஸ்வாமியையர் ,, ௩

சிதம்பரம்தெற்குவாயில்
,, வைத்தியநாததேசிகர் ,, ௧

திருநெல்வேலி
ஜவுளி, சுந்தரலிங்கபண்டாரம் ,, ௧

(இப்பிரதி திருநெல்வேலி வடக்குரதவீதி
காந்திமதிநாதபிள்ளையது.)

ஆக பிரதிகள்-௮.

இவற்றினுள்ளே, சதாசிவப்பிள்ளையவர்கள் தந்த பிரதிமூன்றிலே ஒன்று, ஸ்ரீமத்ஆறுமுகநாவலரவர்களால் சிலவிடங்களில் திருத்தப்பட்டுள்ளது. இப்பிரதிகளைக்கொண்டு ஒப்பிட்டு அச்சிடும்பொழுது, திருவண்ணாமலையாதீனம் ஸ்ரீமத் ஆறுமுகசுவாமிகளவர்கள் சிலவிடயங்களை யறிவித்தமையேயன்றி, ஒரு சமஸ்கிருதபிரதியுந் தந்தார்கள். இப்பிரதிக்கிணங்க சென்னை பச்சையப்பமுதலியார்பாடசாலை சமஸ்கிருதபண்டிதர் ஸ்ரீமத் கிருஷ்ணசாஸ்திரியாரவர்கள் முன்னிலையிற் பார்வையிட்டுப் பதிப்பிக்கப்பட்டது.

கல்வியறிவொழுக்கங்களினும் சிவபத்திமுதலியவற்றினுஞ் சிறந்த ஊற்றுமலைசமஸ்தானம் வீரகேரளம்புதூர் ம-௱-௱-ஸ்ரீ ஜமீன்தாரவர்களாகிய இருதயாலயமருதப்பதேவரவர்கள் அரிய இந்நூலை அச்சிட்டு வெளிப்படுத்தியதுபோலவே, ஒவ்வொருபிரபுக்களும் ஒவ்வொரு அரியநூல்களை அச்சிட்டுவெளிப்படுத்தினும், எப்பாஷைகளினுமினிய நமதுதமிழ்ப்பாஷை நாளுக்குநாள் அபிவிருத்தியையடைந்து தழைத்தோங்குமே! அங்ஙனம் தழைத்தோங்குமாறு சிவபெருமான் திருவருள்புரிவாராக. சுபம். இங்ஙனம்,

அடியார்க்கடியேன்
இராமலிங்கன்.

# பரிசோதனபத்திரம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| க௮ | ௫ | ௩ | முன்னூ ... | மூந்நூ |
| உ௬ | க௩ | உ | கடைமை ... | கடமை |
| உ௮ | ௫ | உ | டிகழ் ... | றிகழ் |
| ௪௪ | ௦ | உஉ | மர் ... | மர்க் |
| ௫௮ | உக | ௯ | விவி ... | விய |
| ௬௩ | ௭ | ௩ | பனேர் ... | பனே |
| ௭௩ | ௫ | ௩ | லொடி ... | யொடி |
| ஷை | ஷை | ஷை | கங்கண் ... | கமு |
| ஷை | ஷை | ௪ | ரத்தை ... | ரமும் |
| ௮௭ | ௦ | உக | அட்ட் ... | அட்ட |
| ௯௦ | க௭ | க | னைமுதலாஞ் ... | னேமுதலாச் |
| கக௩ | க | உ | காம ... | கன்ம |
| கஉ௭ | ௪௦ | ௩ | யிகழ் ... | யிழ |
| க௪௩ | கக | க | குருப் ... | குரு |
| க௪௬ | ௭ | ௩ | வனைபூ ... | வனைப் |
| க௫உ | க௩ | க | இயற்றிப ... | இயற்றிய |
| க௫௬ | ௩௭ | உ | யத்த ... | யுத்த |
| க௬உ | ௫ | ௩ | மூக்நு ... | மூந்து |
| க௬௯ | ௪௫ | உ | தன்னை ... | தம்மை |
| ஷை | ௪௬ | க | தனை ... | தமை |
| க௮௭ | ௩ | ௩ | மதனை ... | மிதனை |
| க௯உ | ௩௫ | உ | கந்தா ... | நந்தா |
| க௯௪ | ௬ | ௪ | வுய ... | வுயர் |
| க௯௫ | க௩ | உ | வென ... | லென |
| உ௦௦ | கஉ | ௩ | நாக ... | காக |
| உ௦௬ | க௭ | ௩ | மேலெம் ... | மேலைப் |
| உ௦௮ | உ௮ | ௩ | மய ... | மாய |

அமைத்துக்கொள்ளல்.

கரு-வது பக்கமுதலியவற்றிலுள்ள வாயிலாய், நன்காய் என்பன முதலிய சில செய்தென்னும் வினையெச்சங்களை செயவெனெச்சமாக வும், கசரு - வதுபக்கத்தில், விஞ்சைச்சிவன்பூசையென்பதற்கு வித்தியாபூசை சிவபூசையெனவும் பொருள்கொள்க.

ககூ-வதுபக்கத்திற் கூறப்படும் பதினுன்கு இந்திரருள் முதலிந்திரன்பெயர் கிடைக்கவில்லை.

---

## பிரகடனபத்திரம்.

இப்புத்தகம் விலைரூபா (க)ஆகவும், ஷை ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளாற் பரிசோதித்துப்பதிப்பிக்கப்பட்ட சீகாளத்திபுராணம் சிவப்பிரகாசசுவாமிகள்முதலிய மூவர்சரித்திரத்தோடு காலிகோபயிண்டு அணு (கஉ)ஆகவும், ஷை ஆப்பயிண்டுபுத்தகமும், திருக்கூவப்புராணமும், சிவப்பிரகாசசுவாமிகள் தோத்திரப்பிரபந்தத்திரட்டும் தனித்தனி அணு (க0)ஆகவும், வசவபுராணம் ரூபா (கவ)ஆகவும், குசேலோபாக்கியானம் அணு (சு)ஆசவும், பழமலையந்தாதியுரை அணு (ரு)ஆகவும், விநாயகர் தோத்திரப்பிரபந்தத்திரட்டு அணு (க௨)ஆகவும், கொடியிடையம்மைபிள்ளைத்தமிழ்முதலியன அணு (க௨)ஆகவும், சென்னை முத்தியாலுபேட்டை தம்புசெட்டிவீதி (கரு0)வது நம்பர்வீட்டில் நம்மிடத்திலும், சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை நாட்டுப்பிள்ளையார் கோயில்வீதி (ருசு)வது நம்பர்வீட்டில் ம-ா-ா-ஸ்ரீ கா. முருகேசமுதலியாரிடத்திலும், சென்னை தண்டையார்பேட்டை திருவொற்றியூர் ஹைரோட் (உஎக)வது நம்பர்வீட்டில் ம-ா-ா-ஸ்ரீ க. வ. திருவேங்கடநாயுடுவினிடத்திலும், சிதம்பரம் சைவப்பிரகாசவித்தியாசாலை மானேஜர் ம-ா-ா-ஸ்ரீ க. பொன்னுசாமிப்பிள்ளையிடத்திலும் தபாற்கூலியுடன் பெற்றுக்கொள்ளலாம்.

கா. ஞானசுந்தர ஐயர்.

# அத்தியாயவகராதி.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# வாயுசங்கிதை.

## பூருவகாண்டம்.

### காப்பு.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கார்தவழ்கயிலைவலியுடையரக்கன்கையினாலலைவுறுவண்ண
மேர்பெறத்திணிபூண்கட்டியதேய்ப்பவிரும்பெரும்பணைநெடுங்கரத்தா
லார்வுறத்தழுவிமுகிலெனமுழங்கியடியவர்க்காரருள்புரியுந்
தாரணிமவுலியையங்கரக்கடவுடாளிணைதலையினாற்பணிவாம்.

### கடவுள்வாழ்த்து.

#### சிவபெருமான்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்பூத்தவுயர்கொன்றைச்செழுமலர்த்தேன்செஞ்சடைமேற்சிந்தச்
செவ்விக், கார்பூத்தவிமையமயில்களிதூங்கப்பதஞ்சலிமாமுனிவன்கா
ணப், போர்பூத்தவரிப்புலிக்கான்முனிபோற்றவயங்குமணிப்பொதுவி
னன்கா, யேர்பூத்தநடம்புரியுமிறைமுதலைவணங்கியுளத்திருத்துவாமே.

## சிவசத்தி.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கட்டழகுடையமுகத்தினுக்குடைந்தகதிர்மதிகண்டுறச்சாம்பு, மட்ட விழ்கமலநின்முகத்தெழிலைவாய்க்கவும்பெறுங்கொலோவென்று, விட்டலர்கடுக்கைநறுமலர்த்தொடையல்புனைந்தவன்வியந்தெடுத்துரைப்ப, வட்டவாண்முகஞ்சாய்த்திளநகைபுரியுமலைமகடாள்வணங்கிடுவாம். (உ)

## விநாயகக்கடவுள்.

மாகமுடியங்குமுப்புரமெரித்தமணிமிடற்றிறைமைவீழ்ந்திறைஞ்சும்
பாகசாதனன்றன்மெய்யிலையலர்ந்தபங்கயக்காடெனவெண்ணி
யாகமோர்பாகத்துமையொடுமெண்ணனகைத்திடவடிபெயர்த்தோடி
வேகமாயுழக்கும்புகர்முகக்கடவுள்விரைமலர்த்தாள்பணிந்திடுவாம். (ங)

## சுப்பிரமணியக்கடவுள்.

உணங்கிவெம்பிறவிக்கழிந்திடுமடியர்க்குணங்கன்மினென்றுரைப் பதுபோன், மணங்கமழ்கமலச்சேவடிப்போதில்வயங்கியதண்டைநின் றொலிப்பப், பணங்கெழுபாந்தள்படப்புடைத்தாலும்பச்சிளமயிலின் மேற்றோன்று, மணங்குமைவயிறுவாய்த்திடவந்தவறுமுகவொருவனை த்தொழுவாம். (ச)

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

சூழ்சுடர்மணிச்சூட்டரவின்வாய்நஞ்சாற்சுழன்றுவீழ்நாய்கனையுய்வித்
தேழிசையளிதாழ்கருங்குழன்மடந்தையெழில்வளரிளமுலைமுகட்டில்
வீழ்தரச்சிறந்தமணம்புணர்வித்துமிக்கபேரருளினைக்கொடுத்த
காழிமாமுனிவின்கமலமொத்திலங்குகழல்வணங்குதல்செய்வாம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

வல்ஞ்சுழியுந்திவயிற்றெழுநோயுமயக்கிடுபிறவிவெங்நோயுங், கல் ங்கியேயகலக்கரைபொருதிரங்குகருங்கடலுண்முளைத்தெழுந்த, விலங் கொளிப்பவளவரைநிகர்முதலையின்னிசைத்தமிழினாற்பாடிப், புலன்க ளைந்தினையும்வென்றுமெய்ஞ்ஞானம்பூத்தவன்பொன்னடிதொழுவாம்.

## சுந்தரமூர்த்திநாயனார்.

### கலிவிருத்தம்.

மகத்தில்வாழ்சனியாயினையென்றுவான்
பகைத்தமூவெயில்செற்றவற்பாடியே
முகத்திற்கண்ணுமுளைத்தெழுஞானமா
மகத்திற்கண்ணுமடைந்தவற்போற்றுவாம். (௭)

## மாணிக்கவாசகசுவாமிகள்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எள்ளிமற்றுலகமுரைத்திடமூங்கையாகியேயுறைந்திடுமெழில்சேர் கிள்ளிபொற்பாவைகிளியெனமிழற்றிக் கேழ்கிளர்மணிமிடற்றிறைக்குத், தெள்ளுசெந்தமிழின்றொடைபுனைந்தேத்தச்சேகறுதிருவருள்புரிந்த, வள்ளன்மாணிக்கவாசகன்றுணைத்தாள்வணங்கியேவாயினாற்றுதிப்பாம்.

## குருவணக்கம்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்னைவினையிருளகலமுரிதிரைப்பாற்கடலகட்டின்முளைத்ததிங்க, ளன்னிலவுபரந்தெறிக்குநலத்தகுவெண்ணீறணிந்துநளினவீட்டி, லன்னமுயர்த்தவனறியாவஞ்செழுத்தின்றன்மையினையறியக்கூறித், தன்னருள்பூத்தாண்டுகொண்டசுவாமிதேவன்றிருத்தாடலைமேற்கொள்வாம்.

## திருத்தொண்டர்.

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கார்மிடற்றிறைவன்கருணைபெற்றுருகிக்கனிந்தமெய்யடியவர்விரிந்த
சீர்புகழ்ந்திடுமென்னாவவர்கமலச்சேவடிபணியுமென்றலைமெய்
போர்சருமவர்தந்தொழில்செயுமென்கையாங்கவருணர்ந்துநன்காக
வேர்பெறவுரைத்தவேவலிற்செல்லுமென்னிருகால்கள்வைகலுமே. ௧௦

கடவுள்வாழ்த்துமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧.

---

## புராணவரலாறுரைத்தவத்தியாயம்.

கங்கையங்கடவுணதிதிரையெறியுங்காளிந்தியொடுகலந்தொழுகு
மங்கண்மாஞாலமேத்திடும்ப்ரயாகையதனிடையைம்பொறியவித்துப்
பொங்குமாதவத்தாலுயர்ந்தமாமுனிவர் புரிசடையண்ணலைப்போற்றிச்
செங்கையாலழலினவிசொரிந்தழியாத்தீதறுவேள்விசெய்தனரால். (க)

ஆயகாலையினிற்சூதமாமுனிவனடைதலுமருந்தவமுனிவர், வாய்வி
ரிமலர்ப்பூந்தவிசளித்தரியமறைதெரிவியாதமாமுனிவ, னேய்வுறவகுத்
தபுராணமற்றெவையுமுணர்ந்துளோயிருங்கதியளிக்கும், பாய்புனலணி
ந்தோன்புராணமொன்றெமக்குப்பகர்ந்திடவேண்டுமென்றுரைத்தார். ()

உரைத்தலுநறவமூற்றிருந்தொழுகுமொளிர்மலர்க்கொன்றைவே
ணியன்று, டிருத்தகத்தொழுதுசுவேதகற்பத்தினியல்பினைத்தெரித்தொ
ருபுராணம், விரித்தனனுலவைவேந்தன்முன்னெடுத்துவிரித்தமாபுரா
ணமற்றதனைத், தெரிப்பனீர்கேண்மினெனவுளமகிழ்ந்துசேகறத்தெரிக்
கலுற்றனனால். (ங)

பொன்னவிர்சடையோனன்னவாகனனைப்படைத்துமுன்புரைய
றவகுத்த, மன்னிடு * பதினெண்விஞ்சையுமறியவழங்கினன்மற்றவன்
விரித்துப், பன்னியவகையாலெவர்க்குநன்குணர்த லரிதெனப்பால்வி
டையண்ணல், கன்னவிறிரடோண்மாயனையழைத்துச்சுருங்கநீகழறுதி
யென்றான். (ச)

மற்றவன்மூன்றாம்யுகத்தினில்வியாதனாகியேவந்தவதரித்துச், சொற்
றனன்பதினெண்விஞ்சையுஞ்சுருங்கச்சொற்றவைதம்முணன்குணர்ந்

---

* பதினெட்டுவித்தைகளாவன:—இருக்கு யசுர் சாமம் அதர்வம் என்னும் வேதம் நான்கு; சிக்ஷை வியாகரணம் சந்தசு நிருத்தம் சோதிடம் கற்பம் என்னும் வேதாங்கம் ஆறு; மீமாஞ்சை நியாயம் புராணம் ஸ்மிருதி என்னும் உபாங்கம் நான்கு; ஆயுள்வேதம் அருத்தவேதம் தனுர்வேதம் காந்தருவவேதம் என்னும் உபவேதம் நான்கு என்பன.

தோ, ருற்றறி † புராணமோர்பதினெட்டாங்கவற்றினுளுயர்மறைப்
பொருளைத், தெற்றெனவுரைக்குஞ்சைவமோர்நான்காம்புராணமாந்தெ
ரித்திடுங்காலே. (௬)

அறைந்திடுஞ்சைவம்பன்னிரண்டாயசங்கிதையாகியேயமருஞ்
சிறந்தமற்றவற்றுள்வாயுசங்கிதையீங்கிதுதிகழ்நறுமலர்ப்பொகுட்டி
லுறைந்திடுமறையோன்காண்கலனாகவுயர்ந்தநீற்றொளிமதிமுடியோ
னிறைந்தநற்புகழையெடுத்தெடுத்தறியநிகழ்த்துமானிடருந்தவத்தீர். சூ

நீதறுமிந்தவாயுசங்கிதையைத்தேமொழிபங்கன்வார்கழற்காற்
போதினிலன்புபூண்டுநான்மறையின்பொருளெலாமரிறபத்தெரிந்து
கோதறுசைவனாகியேயுறையுமவற்கலாற்கூறொணாதென்று
மாதவத்துயர்ந்தவியாதனைவணங்கிச்சூதமாமுனிவரன்வகுத்தான். (எ)

புராணவரலாறுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கஅ.

## இருடிகள் பிரமலோகமடைந்தவத்தியாயம்.

முன்னைநாட்சிறந்தவறுகுலத்துதித்தவிருடிகண்மறைமுடிவதனின்
மன்னிடுமரியபரம்பொருளதனையறிகலராகியேமயங்கிப்
பொன்னெடுங்கிரியின்முகட்டினிலிரவிமட்கிடப்பொலிவுறுநகர்வா
ழன்னவாகனனையடைந்தடிவணங்கியாசறத்துதிக்கலுற்றனரால். (க)

---

† புராணம் பதினெட்டாவன:—பிரமம் பதுமம் வைணவம் சைவம் பாகவதம் பவுடியம் நாரதியம் மார்க்கண்டேயம் ஆக்கிநேயம் பிரமகைவர்த்தம் இலிங்கம் வராகம் காந்தம் வாமனம் கூர்மம் மற்சம் காருடம் பிரமாண்டம் என்பன. இவைகள் சிவபெருமானால் திருநந்தி தேவருக்கு உபதேசிக்கப்பட்டு, இம்முறையே வழங்குகின்றனவாகலின் சைவபுராணம் நான்காவதாயிற்று.

முத்தொழிலியற்றமூவுருத்தாங்குமுதல்வனேமுதுமறைவிரித்த
வத்தனேயடியார்பழவினையெல்லாமகற்றியவருட்பெருங்கடலே
கொத்தலர்கூந்தலாயிழைவாணிதலைவனேகூரறிவில்லேம்
பத்திமையெய்தியுய்ந்திடவருள்வாயெனநனிபழிச்சினரன்றே. (௨)

வழுத்துபுநின்றமாதவத்தோரைமலர்முகமெடுத்தனனோக்கித்
தழைத்தபேரருளாலெம்முழைநீவிர்வந்தவாறென்னெனச்சாற்றப்
பழுத்தபேரன்பாலுணர்ந்திடுபொருளைப்பாற்படவுணர்கலேமாகி
விழுத்தகுவேதமுதல்வனேநினதுவிரைமலர்த்தாளடைந்தனமால். (௩)

அடைந்தனமென்னக்கேட்டலுஞ்சிறந்தவலர்மலராதனத்திழிந்து, தடங்கொடாமரைப்பூங்கண்கணீர்வாரத் தயங்கொளிமெய்ம்மயிர்பொடிப்ப, மடந்தையோர்பாகனடிமுதனினையாமணிமுடிமிசைக்கரங்கூப்பிக், கிடந்தபேரறிவான்மற்றவன்பெருமைகிடையறக்கிளக்கலுற்றனனால். (௪)

நான்மறையினுமுணர்கலான்யாவனவிற்றிடற்கரியவன்யாவன்
மோனமாயுறையுமுனிவரராலுமுற்றுநன்கறிகலான்யாவன்
றானனிவிளங்கியுறைபவன்யாவன்றாழ்சிறையன்னமீதுயர்த்த
வானுறைபிரமன்முதலியயாவும்வரன்முறைவகுத்தவன்யாவன். (௫)

காரணமெவைக்குங்காரணமாகியுறைபவன்யாவன்வெங்கனல்கால், போரணிமழுவாளுடையவன்யாவனென்னைமுன்பொருந்திடப்படைத்துச், சீர்திகழ்ஞானமளித்தவன்யாவன்றிகழ்ந்தொளிவிசும்பினூடலையா, தார்தரவுறைவோன்யாவன்வேள்படமுன்னழல்விழிதிறந்தவன்யாவன். (௬)

ஒன்றதாயுறையுங்காரணந்தன்னையொழிவறவிரிப்பவன்யாவ
னின்றபேருலகினிறைந்தமன்னுயிரைநீங்கலாதியக்குவோன்யாவன்
றுன்றுபேருயிருளுறைந்துமவ்வுயிராற்றோன்றிடவறிகலான்யாவன்
மன்றநீடுலகம்யாவையுங்கெடினுமாய்கலாதுறைபவன்யாவன். (௭)

மூவகையாயசத்திகளுடையோன்யாவன்ருண்முளரியைநினைந்தோ
ரோவறநீங்காப்பசுவுருநீக்கியுலைவறவைப்பவன்யாவன்
ருவில்பேர்மதியுமிரவியுமட்கத்தயங்கிநின்ருேளிர்பவன்யாவன்
வீவிலாவவனேயென்றுமாயாதுவிளங்கியேயமர்பரம்பொருளே. (அ)

பரம்பொருளாகியுறைபவன்ருனேபாற்படவுணர்ந்திடப்படுவோன், றிருந்திடவாதியந்தமின்ருகச்சேர்பவன்சிறந்திடவெங்கும், விரிந்துறைந்திடுவோன்வீவிலாவொளியாய் விளங்குவோன்மெய்யடியவர்கள், வருந்திடாதழியாமுத்திநன்களிப்போ னெவர்க்குமேலாகிமன்னிடுவோன். (கூ)

அளந்திடயார்க்குமரியவன்பணிந்தோர்க்கரும்பெருஞானமுற்றளிப்போன், றுளங்கொளிமணிப்பூண்மிளிர்பராசத்திதுணைமுலைக்கோடுறமணந்து, விளைந்தபேர்மகிழ்வாற்காளையாம்பருவமேவியேவிரும்பிடவுறைவோன், வளர்ந்தயரண்டமெவற்றையுங்கரத்தால்வாங்கியேவிழுங்குதல்புரிவோன். (௧௦)

ஆங்கவன்ருனேயுணர்விஞலுணர்தலன்றிமற்றறிந்திடற்கரியன்
றீங்கறவவனையுணர்பவர்வெய்யதீத்தொழில்புரிகுநரோனும்
பாங்கலாநெறியிஞெழுகுவோரோனும்பனிமதிசடைமிசைவைத்த
மாங்குயிற்கிளவிமலைமகள்பங்கன்மறைமலரடியடைந்திடுவார். (கக)

அறைந்திடுநூலஞ்சுருக்குமம்பரமென்றன்னவன்றனக்குமூன்றுருவஞ்
சிறந்திடுந்நூலநம்மையேமுதலாந்தேவர்நன்குணர்வர்சுக்குமந்தா
னிறைந்திடும்யோகம்வல்லவருணர்வர்நிகழ்த்திடற்கரியதாம்பரந்தான்
றிறம்பலில்சைவஞானமன்னினராற்றீதறவுணர்ந்திடப்படுமால். (கஉ)

அற்றுமன்றறியச்சுருங்கயானுரைப்பனுயிழைபாகன்வார்கழலிற் [ன்
றெற்றெனவறிவாற்பத்திமையெய்தல்வேண்டுமோற்சிறந்தபத்திமையா
மற்றிணையில்லாமுத்தியெய்திடுமோன்மாசிலாதாயபத்திமையு
முற்றிழைபாகனருளிஞலெய்தல்வேண்டுமோன்மொழிந்திடுங்காலே. ()

அருளுநான்மறைகளுரைத்திடுதருமமாசையின்றுயறிந்தியற்றிற்
றெரியுமற்றதனுற்பாவபுண்ணியங்களொத்திடுமொத்திடிற்சிறந்த
பொருவறுசிவமாயோகம்வந்தெய்துமெய்திடிற்புகலுதற்கரிதாய்
மருவொணுதாகியுயர்வறவுயர்ந்தமாசிலாமுத்தியெய்திடுமால். (கச)

அறைந்தவிந்நெறியையன்றிநம்மிறைவனருள்பெறினன்னைதன்வயிற்றி
னுறைந்திடுகாலையேனுநல்லிளமையுற்றிடுபோதினுமூப்பு
நிறைந்திடுகாலையேனுமுற்றழியாநிலவியமுத்திவீடெய்திச் [னே.
சிறந்தபேரின்பத்துறைந்திடப்படுமாற்றெள்ளிதிற்றெரிந்துணர்ந்திடி

ஆதலாலிறைவனருள்பெறவேள்வியாற்றுமினுற்றுமக்காலை
யூதைவேந்தெய்தப்படுமவன்றருமநெறியினையுரைத்திடக்கேட்டுக்
கோதறுகாசியடைகிரோரிறும்பூதெய்துமாங்கதுகண்டுகுறியாத்
தீதறுநம்பாலடைமினோர்பவத்தின்முத்திவீடெய்திடத்தெரிப்பாம். ()

என்றுருகிரியயற்றுபுவிடுத்தாங்கிதுவிழப்பட்டவத்தலத்தின்
மன்றநீர்வேள்வியயற்றுமினென்னமற்றதன்பின்னவர்நடந்தார்
சென்றுவாய்மடியவோர்தலந்தன்னில்விழுந்ததுசிறந்தமாதலத்தை
நின்றமாதவத்தோர் * நைமிசாரணியமெனப்பெயர்நிகழ்த்தினரன்றே.

இருடிகள்பிரமலோகமடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருடு.

---

## வாயுபகவானடைந்தவத்தியாயம்.

---

உரைத்துயர்தலத்தில்வேள்விநன்கியற்றுகாலையிலுலவைவேந்தெய்த
வருத்தியாலெதிர்ந்துபணிந்தலர்தூவியம்பொனுதனமளித்தனராற்
றிருத்தகவிருந்துவேள்விதீதறவேசெய்திடலாயதோவென்ன
வருத்தமின்முனிவர்மற்றவனேடுமிங்கிதுவழங்கலுற்றனரால். (க)

---

* நேமி-சக்கரம். ஶ்ரீ-கிடத்தல்; நைமிசம்-சக்கரமோய்ந்தவிடம்.

யாங்கண்முற்காலைஞானமொன்றின்றியன்னவாகனன்றனையெய்தி
த், நீங்கறஞானமுதவெனவுரைப்பத்திங்கள்வேணியனடி முன்னி, யோ
ங்கிருவேள்விபுரிமினக்காலையுலவைவேந்தும்முழையடைந்து, பாங்கி
னின்ஞானமுமதுளங்கொள்ளப்பாற்படப்பகர்வனென்றுரைத்தான். ()

ஆயவாசகத்தைக்கேட்டிவணெய்தியரியநான்மறையுரைப்படியே
யேய்வுறவேள்வியாயிரம்பருவமியற்றினமியற்றியவீற்றி
னீயிவணடைந்தாயெமக்குமாசறவேநெஞ்சகங்கொளநிகழ்த்தென்ன
வாயுநாயகனுமுளமிகமகிழ்ந்துவரன்முறைவகுத்துரைத்தனனால். (௬)

வாயுபகவானடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬அ.

---

## ஞானநிலைமையுரைத்தவத்தியாயம்.

எய்தியவிருபத்தொன்பதாஞ்சுவேதலோகிதகற்பத்தினெழில்சேர்
மைதிகழ்மிடற்றுமுதல்வனைநினைந்துமலரயன்றவமியற்றினனு
லுய்திறமருளவேண்டிமான்மழுவாள்கரந்தவைத்தொண்ணுதல்பாகன்
மெய்திகழ்சுவேதமுனிவரனுகிமேதகவெளிவந்துநின்றான். (க)

நின்றநற்றந்தையாகியவரனைநிழன்முடிதாழ்த்தடிவணங்க, வன்ற
வனழிவின்ஞானமுங்காயத்திரியுநன்கருளிடவடைந்து, மன்றவிவ்வுல
கம்யாவையும்படைத்தான்மற்றவனுழையுயர்ஞான, மொன்றயானடை
ந்தேனென்னலுமுனிவருணர்ந்தினிதுரைக்கலுற்றனரால். (உ)

நான்முகக்கடவுளுரைத்திடுஞானம்யாதுநன்காய்நவின்ஞானந்
தானெமக்கறியவருளுதியென்றுதாவில்சீர்முனிவரருரைப்பத்
தேன்வழிகமலவீட்டினிலுறைவோன்சேவடித்துணைமலர்நினையா
மோனமாயிருந்துகாற்றினுக்கிறைவன்முனிவரமொழியலுற்றனனால்.

## கொச்சகக்கலிப்பா.

அறைந்திடுமஞ்ஞானத்தாலடையுமாற்றுன்பமது
நிறைந்தொளிருஞானத்தாற்கெடல்வேண்டுநிறைஞான
முறைந்தபசுபாசமுயர்பதியையறிவுணர்வென்பார்
திறம்பவிலாமாதவத்தின்மிக்குயர்ந்தசெம்மையோர். (சு)

விரிந்துறையுமசடமொடுசடநியந்தாவினைமிக்கோர்
நிரந்தமரும்பசுபாசபதியென்றுநீங்காது
திருந்தியவக்கரஞ்சரஞ்சொல்பரமென்றுஞ்செப்புவராற்
புரிந்ததவத்தீரொன்னமற்றவரிங்கிதுபுகல்வார். (ரு)

அக்கரமோடுறைகின்றசரம்டரம்யாமறியும்வகை
யொக்கவெடுத்துரையென்னப்புருடனுறைபிரகிருதி
மிக்குயர்ந்தவீசனெனவிளம்புவராலெனலோடுந்
தொக்கமுனிவரர்மீட்டுமிவைதெரிந்துசொற்றனரால். (சு)

எபவுறைபிரகிருதியாதந்தப்புருடனெவ
ஞயபிரகிருதியுமப்புருடனுமெக்காரணத்தான்
மேயவுறக்கூடுவதுகூடவிளைப்பவனெவன்முன்
றூயவறிவினிர்மிக்கோய்துகளறநீசொல்லென்றூர். (எ)

விண்டபிரகிருதியேமாயைமிகுமாயையா
லுண்டிடப்பட்டவன்புருடன்மாயையினிலுற்றமர்ந்து
மண்டிடப்பட்டிடுவதுசெய்கருமமலத்தால்வருமாற்
றண்டலிலிவ்வகைசெய்வோன்சிவனென்னச்சாற்றுவரால். (அ)

சாற்றுவவொன்றுரைத்திடலுஞ்சாற்றுமந்தமாயையா
தேற்றமிகுமாயையான்மறைப்பவுறைபவனெவன்முன்
றேற்றுகின்றமலம்யாதுசிவம்யாதுதுகளறவே
யாற்றவெமக்கெடுத்தினேயறையெனமாதவரறைந்தார். (கூ)

அறையமகேச்சுரன்சத்திமாயையாமார்மலத்தா
னிறையமுனமேமறைந்துநின்றுறையுமான்மாவை

முறையிலந்தமாயைதான்மூடுமலமாயைகெட
வுறைவதுவேசிவமென்னவுரைப்பராலெனவுரைத்தான். (க0)

எங்குமுறையான்மாவைமாயையெவற்ருன்மறைக்கு
மங்குமறைத்திடுவதுதான்யாதிற்காவாரந்திடவே
மங்கமறைத்திடலெவற்ருன்மாசறவேமாய்ந்தொழியு
மிங்கறைதியெனத்தவத்தோருலவைவேந்தியம்பினனுல். (கக)

மற்றவந்தக்கலைகளான்மறைத்திடுமான்மறைப்பதுதா
னுற்றியற்றுகருமத்தாலுறுபோககாரணமாய்த்
தெற்றெனவேமலமாயத்திருமான்மறைப்பதெனச்
செற்றமிலாமாதவத்தோர்பின்னுமிதுசெப்பினரால். (க௨)

கலைமுதலாயினயாவைகருமம்யாதக்கரும
மலைவுறவெக்காலமுதல்வந்ததுவந்ததுமாய்ந்து
தொலைவுறலெக்காலமுறுபலன்யாதுசொலமன்னி
நிலைபெறுமாதாரமெதுபோகமெவற்ருனேரும். (க௩)

உண்டிடுவதேதந்தவுறுபோகந்தனக்குற்ற
தண்டலில்காரணமேதுமலமுழுதுந்தணப்பதற்கு
விண்டிடுகாரணமேதுமேவுமலமாயவொளி
கொண்டுறைவோனெவ்வாறிங்குறைவனிதகூறென்ருர். (க௪)

என்னலுஞ்சொல்கலைவித்தையராகமுடனியல்கால
மன்னுகின்றநியதியேகலைமுதலானவைமன்னித்
துன்னுமிருவினைகளேகருமமாஞ்சுகதுக்க
மன்னவற்றின்பலமென்னவறையுமாலருமறையே. (க௫)

அறைகருமமனுதிபாமவற்றினுல்வருபலத்தை
முறையினிலுண்டிடமுழுதுமாயுமான்மொழிகரும
முறையுமனமாதாரமாயுறையுமுறையுமது
மறிவதற்காயேபோகநுகர்வதெனவழங்குவரால். (க௬)

உறைந்திடுமவ்வியத்தமேயுண்டிடப்பட்டிடுபொருளா
மறைந்திடுமிந்தியங்களொடுமமருமந்தக்கரணமே
நிறைந்துறையுமுடம்பாகுநிகழ்போககாரணந்தான்
றிறம்பலிலாப்பலநுகர்ந்தபின்சிவபாவனைசேரும். (௧௭)

பாவகத்தாலழியாதசிவன்றனருள்பயக்குமான்
மேவியவவ்வருளினான்மலமாயும்வீந்ததற்பி
னேவலிலப்புருடனேசிவனென்னவுறைவனெனத்
தாவிறவத்தோர்பின்னுமிவையெடுத்துச்சாற்றினரால். (௧௮)

கலைமுதலாயினவைந்தின்காரியமொன்றேபலவோ
நிலைபெறுமான்மாவெவற்றானீங்காதுண்பவனென்றுஞ்
சொலவுறையும்புருடனென்றுஞ்சொலப்படுவன்றோன்மையா
யலகிலாதுறைகின்றவவ்வியத்தம்யாதாமால். (௧௯)

ஆங்கதுதானெவ்வகையாயருந்திடப்பட்டிடுமெருந்த
நீங்கவிலாதேயுறைந்துநின்றகாரணமேது
தாங்குகின்றவுடம்பேதுசாற்றுதிநீயெனமுனிவர்
வீங்கியெவற்றினுமுறையுமுலவையவைவிரித்தனனால். (௨௦)

கலையோடுமியல்விஞ்சையறிவொடுகோண்கிரியையினை
நிலைபெறவுண்டாக்குமானின்றவந்தவராகந்தான்
மலைவறவேயியற்றுவிக்குமற்றையதாங்காலமே
யுலைவறவீங்கிவையிந்நாளுறையுமெனச்செய்யுமால். (௨௧)

மற்றவந்தநியதியேமன்னுகின்றபொருள்வடிவை
யிற்றெனநன்குணர்த்துமாலியம்புபிரகிருதியே
யுற்றிடுமவ்வியத்தமொடுபிரதானமெனவுணர்ந்தோர்
சொற்றிடப்பட்டிடுமென்னச்சொல்லுவராலுயர்ந்தோரே. (௨௨)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இன்பந்தருமாற்சாத்துவிகமியம்புகின்றவிராசதமே
துன்பம்விளைக்குமருடருமாற்சொல்லக்கிடந்ததாமதந்தா

னன்பிற்பெரியமாதவத்தோரறைந்தவிவைகள்வாயிலாய்
முன்புற்றுரைத்தவவ்வியத்தமருந்தப்படுமோன்மொழியுங்கால். (உ௩)

சுருங்கவுறைதன்மாத்திரைகளவற்றிற்றோன்றும்பூதங்க
ணிரந்தேயுறையிந்தியங்கள்புத்திமுதலானவையுநீங்காமற்
றிருந்தவுண்டாங்காலத்தில்விகாரப்படுஞ்செப்பியவிவைகள்
விரிந்தேதோன்றாக்காலத்திலவ்வியத்தமெனமேவும். (உ௪)

மெய்கண்முதலாங்காரியங்களானபோதுவியத்தமாம்
பையவிரியப்படும்வியத்தம்பகரவ்வியத்தமெனுமிவைகண்
மைதிருளத்தோர்வேறல்லமண்ணுங்குடமும்போலென்பார்
நையாதுறையவ்வியத்தமேயாவுமாகுமெனநவின்றான். (உ௫)

நாடிலுறுமெய்புந்தியொடுநவிலிந்தியங்களிவையன்றித்
தேடலரியவான்மாவேறுளதோதெரித்தியெனவென்று
நீடுதவத்தான்மிக்குயர்ந்தநிகரின்முனிவருரைத்திடலு
மாடுற்றுறைகாற்றினுக்கிறைவன்மாசின்றாகவுரைத்தனனால். (உ௬)

ஒன்றுமறியாரிவ்வகையேயுரைப்பர்புந்திமுதலொடுங்க
வின்றுதுயின்றேனெழுந்தநன்காய்த்துயின்றேனென்னவிசைத்தமை
லென்றுமெவைக்குநடுவாகியிருக்குமான்மாவுளனவனே [யா
மன்றமறையந்தரியாமியென்னநாளும்வழங்குமால். (உ௭)

மறைகளிவ்வாறேயறையுமான்மாவெவையுமன்னியே
யுறைவனுறையப்பட்டிருந்துமுணர்வாலுணர்தலன்றியே
யறையிந்தியமற்றெவற்றினுக்குந்தோன்றானெண்பெண்ணவியலனாய்
நிறையுமறிவான்மிக்குயர்ந்தோர்காணவென்றுநிலவுவனால். (உ௮)

ஒலிநீர்நினைக்கப்பட்டநிலமோங்குமுளையுண்டாக்குதல்போன்
மலியுமஞ்ஞானத்தினலியற்றுவரம்பில்கருமமே
நலியுந்துன்பம்பிணிநிறைந்தநவைசேருடம்புதருமுடம்பே
யலகின்றிறக்கும்பிறப்பதூஉமற்றேயாகுமறையுங்கால். (உ௯)

இவ்வாறுபவுடம்பினலெழுந்தமுகிலினன்மறைந்துஞ்
செவ்வேவிளங்கித்தோன்றியுமேற்றிகழுமதிபோற்செய்கின்ற
வெவ்வாய்வினையான்மயங்குகின்றவான்மாமறைந்தும்விடப்பட்டு
மொவ்வாதமர்ந்துதோன்றுவனலுணர்வாலுணர்ந்துசாற்றிடிலே. (௩0)

சாற்றுமான்மாநிதிபெண்டிர்மக்கடமுவவேசார்ந்து
போற்றவுறைதனெறியிடையிற்பொருந்துமுறவையொக்குமாற்
றேற்றுமிந்தவுடம்பினையுமவற்றிற்றுலங்கான்மாவினையு
மாற்றவறிந்தேயுறைவனலழியாப்பரமவான்மாவே. (௩௧)

நிலவும்பரமவான்மாவைநின்றசிவனறிகலனன்
மலரோன்முதற்ருவரமிருய்மன்னுமெவையும்பசுவாகு
மலகின்மாயாபாசத்தாற்பிணித்தங்கவற்றைநரகிடையும்
விலகிபொளிகால்கதியிடையும்வைத்துவிளையாடுவன்சிவனே. (௩௨)

பசுபாசத்தையகன்றவற்றையேவும்பதிவேறுளனென்ன
வசைவின்றுகவுரைத்தனையாலதுதானெமதுமனங்கொள்ள
நசையாலுரைத்தியெனமுனிவருலவைவேந்தனளிர்சடையின்
மிசையேமதியமணிந்தோனைப்பணிந்துபுரைதீர்ந்திடவிரித்தான். (௩௩)

அறிவொன்றில்லாப்பாசமுமற்றறிவுமயங்கியுறைபசுவுஞ்
செறியுஞ்சிருட்டிதனைநன்காச்செய்யவறியாவாதலினு
லுறையுங்கருத்தாவுளனவன்றான்யாவனெனின்லுயர்பதியாய்க்
குறைவின்றுறைபீச்சுரனென்னக்கூறும்பழையநான்மறையே. (௩௪)

பசுவாயுறைவோனேரிடத்திற்பதியாயுறைதல்பசுவெவைக்கு
மிசையேயமர்ந்துபதியாகிவிளங்குஞ்சிவனேவலினுகு
மிசையக்குருடனெறியினிடையேகவிலங்குவிழியுடைய
வசைதிரொருவனலன்றேமாசிலாதமாதவத்திர். (௩௫)

மன்னுபசுபாசம்பதியைமாசின்றுகவுணர்பவனே
முன்னியறிவாற்பிரமத்தைமுற்றநன்காவுணர்ந்துளோ

னன்றோன்பாகீரதிகோடியலைக்கொத்தலம்பியார்த்தொழுகு
மின்னுஞ்சடிலத்திறைகழற்கால்விரைப்பூங்கமலத்தடைகுவனல். (கசு)

உறையுந்தயிருணெய்போன்றுமெள்ளிலுறையெண்ணெய்யைப்போன்று
மறையுமரணியனல்போன்றுமமரும்பரமவான்மாவை
நிறையுந்தவத்தோரகத்திடையிற்காண்பார்நிலவுமப்பொருளே
முறையாற்றொழில்களொருமூன்றுமியற்றுமூவர்முதல்வனே. (கஎ)

அவனேபிரமன்றனைமுன்னம்படைத்தோனணுவிலணுவாகி
யுவமையின்றாயுயர்ந்ததற்குமுயர்வோன்பரிதியொளியாவோ
னெவையுமாகுமாயைதனைக்கடந்தோன்றிசைகளெவற்றிடையு
நவைதீர்முகங்கைகாலுளனாய்நாமிங்குணரவுறைவோனே. (கஅ)

காண்பான்கண்களிலனாகிக்காதின்றாகிக்கேட்டிடுவான்
சேண்போய்த்திசைகள்யாவையினுந்திரிவான்கால்களின்றியே
பாண்பாவியசொல்லுமைபங்கினவனேயறிவான்பகரொவையும்
பூண்பாவகலத்தமரர்களுங்காணாரவனைப்பொருந்திடவே. (கசு)

அன்றோன்மாயைவெள்ளைசிவப்பமருங்கறுப்பினிறம்வாய்த்து
மன்னுவுறைசாத்துவிகமிராசதந்தாமதமாங்குணமருவித்
துன்னுவுலகம்படைக்குமாலொருவனதனுற்றுவக்குறுவ
னெந்நாளினுமற்றதைக்கடந்தேயிலங்கியொருவனுறைகுவனல். (சo)

இலங்கியுறையுமாங்கவனையிதயத்திடையேகாண்பவனே
புலன்கள்வழியேதன்னுணர்வைப்போக்காதிடர்களூறியற்றி
மலங்கவடருமாயைதனைமாயநூறிமாயாது
துலங்கியொளிரும்பேரின்பமுத்திவீட்டிற்சுடர்ந்துறைவான். (சக)

காலமொருமூன்றினுமழியாப்பொருளையுளத்திற்காணும
லேலமுத்தியடைவதற்கிங்கெண்ணலெங்குமாய்விரிந்த
நீலநிறவாகாயத்தைநின்றுசுருட்டிக்கொள்வதே
சாலநிகர்க்குமெனப்பழையதளிநான்மறைகள்சாற்றுமால். (சஉ)

அழிபாவிந்தஞானகதைவெகுளியுளத்தோடமர்பவர்க்கு
மிழிபாந்தொழிலினடப்பவர்க்குமேசமுடையபுதல்வருக்கும்
வழிபாடியற்றல்புரியார்க்குமழுவாளேந்துமிறைவனென
விழைவாற்குரவர்தமையுணரார்தமக்கும்விளம்பலாகாதே. (சரு)

ஞானநிலைமையுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அக.

---

## காலவியல்புரைத்தவத்தியாயம்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றலுங்கால்த்தியல்புமக்காலமெவனுழையிருக்குமாங்கதுவு
மொன்றியகாலத்தகப்படாதென்றுமுறைந்திடப்படுபவன்றனையு
மின்றுநீயெமக்குக்கூறுதியென்னவிருந்தவரிசைத்திடலோடுங் [டுத்தே.
கொன்றைவேணியன்றன்குரைகழற்றொழுதுகூறினனுலவைவேந்தெ

நிகழ்ந்திடுநிமிடங்காட்டைசேர்கலையேயங்கமாய்நிறைந்திடுங்காலம்
பகர்ந்தவக்காலஞ்சிவனிடத்தமருமற்றது பண்ணவராலுந்
திகழ்ந்தமாயோகம்வல்லவராலுங்கடந்திடலரிதுதேன்பிலிற்று[வனால்.
மகைந்தபூங்கொன்றையணிமலர்த்தொடையலண்ணலேயகன்றுறைகு

ஆங்குறைகாலமளகைவேந்தேங்கியயர்ந்திடவளவறப்பெருகி
யோங்கியநிதியப்பெருமையினுமுற்றபேருயர்குலத்தானும்
வீங்கியமகிழ்ச்சியுடையவரொன்றைநினைந்திடவேறுமற்றொன்றைப்
பாங்குநின்றியற்றுமற்றதன்பெருமையாவரோபகர்ந்திடவல்லார். (௩)

துன்பமுற்றொருவன்றுயர்க்கடலாழ்ந்துதூங்கிடத்துயரிலனுகி
யின்பமுற்றொருவனேனையங்கடலுளாழ்ந்தினிதிருந்திடச்செய்யு
மன்புறுகீதங்கேட்டுநாடகங்கண்டமர்ந்துநன்குறைபவரிடத்து
மன்பதையிடத்தேற்றுண்பவரிடத்துமாறிலாவகைநடந்திடுமால். (ச)

பிறத்தலோடிறத்தல்புரிதல்வான்முகில்கள்பெய்திடவியற்றுதல்வெய்ய,மறத்தொழிறருதல்வாயுவையியக்கல்வரம்பில்லைபங்கூழினையுதவ, லறத்திறனடத்தலல்லவைபுரிதல்காலமென்றேயுயரறிவாற், றிறப்படவுணர்ந்தோரவற்றினைக்கடந்துதிங்கள்வேணியனுருக்காண்பார். (ரு)

காலவியல்புரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அசு.

---

## காலவளவுந்தேவாதிதேவராயுளும் பகர்ந்தவத்தியாயம்.

---

எனலுமாங்கிருந்ததாபதர்காலமெவ்வகையளவிடப்படுநீ
தினைவினிலுரைத்தியென்றலுங்கதிர்கால்சுடர்முடிவாயுநாயகனுங்
கனைவரிவண்டுவீழ்ந்துவீழ்ந்துழக்கக்கலுழிநீர்மதம்பொழிகரடப்[ளுல்,
பனைநெடுங்கரத்தோன்றுதையைப்பணிந்து * பாருறவுரைக்கலுற்றன

உற்றிடுநிமிடமோர்பதினைந்துகாட்டையென்றுரைத்திடப்படுமான்
மற்றவக்காட்டைமுப்பதுகலையாம்வகுத்திடுங்கலையொருமுப்பான்
பெற்றிடுமுகூர்த்தமாமதுமுப்பானிராப்பகல்பின்னராங்கவையே
தெற்றெனவுணர்ந்தோரோர்பதினைந்துபக்கமாமென்றுசெப்புவரால்.

பக்கமோரிரண்டுமாதமாமதனுட்பகர்ந்திடுமபரபக்கந்தான்
மிக்கதாம்பகலாமிரவெனலாமான்மேவுறுபூருவபக்கந்
தொக்கதென்புலத்தோர்தமக்கறுதிங்களயனமாஞ்சொற்றவீரயனந்
தக்கவோர்வருடமானுடர்க்கென்னச்சாற்றுவரறிவின்மிக்கோரே. (ரு)

மானுடவருடந்தேவர்கட்கொருநாண்மாசறுவடதிசையயன
மானதோர்பகலாந்தென்றிசையயனமிரவெனவறைந்திடலாமாற்

---

* பார்-முறை.

பான்மைசால்வருடமுப்பதோர்திங்களாகுமாற்பகர்ந்திடுதிங்க
ளூனமிலோர்பானிரண்*டொருவருடமாகுமாலுணர்ந்துரைத்திடிலே.

முன்னிடுதேவவருடமோர்நாலாயிரமொழிமுன்வரும்யுகந்தா
னன்னதன்சந்தியாகுமானூறுங்கதன்கூறுமற்றதுவே
பின்னதாம்யுகமூவாயிரஞ்சந்திபேசின்முன்னூறதன்கூறு
மின்னதேயிரண்டாயிரமெனமொழிபவெய்துமூன்றும்யுகத்தெல்லை. ரு

ஆங்கதன்சந்திபோரிருநூறுமன்னதன்கூறுமற்றுரு
நீங்கலாதெய்துங்கலியுகத்தெல்லையாயிரமாகுமானிகழ்த்தி
லாங்கதன்சந்திநூறதன்கூறுமன்னதேயாகுமாலுயர்ந்தோ
ரோங்கியசதுரயுகமொருபன்னீராயிரம்வருடமென்றுரைப்பார். (சு)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முறைபேநடக்குஞ்சதுரயுகமெழுபத்தொன்றுமுடிந்தொழியி
னறையுமனுவந்தரமாகுமதுதான் ‡ பதினான்ககன்றொழிதல்
குறைவில்கற்பமெனப்படுமாற்கற்பங்குளிர்நாண்மலர்ப்பொகுட்டி
லுறையுமுகநான்குடையமறையொருவன்றனக்கோர்பகலாமால். (எ)

அதுதானோராயிரங்கடந்தாலன்னோன்றனக்கோர்வருடமா
மதியோவொண்ணுயிரம்யாண்டோர்யுகமாமென்னவகுப்பரா

---

* இத்தேவவருடம் பத்துக்கொண்டது சத்தவிருடிகளுக்கு ஒரு வருடமும், அது பத்துக்கொண்டது துருவனுக்கு ஒருவருடமுமாம். இதனை "ஈறில் வானத் துறையமரர்க் கிசைத்த வாண்டோ ரீரைந்து, மாறில் சத்த விருடிகளுக் கோராண் டாகு மருடீர்ந்து, வீறு சேரு மற் றவர்க்கு விதித்த வாண்டோர் பத்துவினை, நூறி யுயர்ந்த துருவனுக் கங் கோராண் டாகு நவலுங்கால்." என்னும் இலிங்கபுராணச் செய் யுளானுணர்க.

‡ பதினான்குமனுக்களாவார்:—சுவாயம்பு சுவாரோசிஷன் உத்த மன் தாமசன் இரைவதன் சாக்குஷன் வைவச்சுதன் சூரியசாவர்ணி தக்ஷசாவர்ணி பிரமசாவர்ணி தருமசாவர்ணி உருத்திரசாவர்ணி ரௌச் சியன் பௌதியன்.

லூதுவாயிரமோர்சவனமாமஃதொன்பதினுயிரங்கழிந்தா
லெதிராநின்ற * பரமாகும்யாமிங்கறியவியம்பிடிலே. (அ)

மலரோன்பகலிற் † பதினுன்கிந்திரர்தாமிறப்பர்மாதத்திற்
ருலைவார்நானூற்றிருபதின்மர்வருடமொன்றிற்ருலைந்திடுவார்
நிலையற்றையாயிரத்துநாற்பதின்மர்நிறைந்தகாலத்துட்
குலைவாராவியஞ்சிலக்கத்தொருநாற்பதினுயிரர்குறைந்தே. (கூ)

மாயோன்பகலிலோர்மறையோன்மாய்வான்மாயோன்மாய்ந்திடுவான்
காயுமழுவாளுருத்திரனோர்பகலிற்கணிச்சிமற்றவனுந்
தூயநீருர்மகேச்சுரன்றன்பகலிலிறப்பான்சொல்லவனு
மேயவுறையுஞ்சதாசிவன்றன்பகலிலிறப்பானெண்ணுங்கால். (கo)

மறிமானேந்துசதாசிவனுமாய்வான்சிவன்றனோர்பகலி
லுறைவான்சிவனேயெஞ்ஞான்றுமுயிருக்குயிராயுற்றோங்கி
யறிவாற்படைக்குங்காலமெலாம்பகலாமிரவுமற்றுகு
நிறையுமவனுக்கிரவுபகலின்றுனிகழ்த்தலன்றியே. (கக)

உலகமெவையுந்தன்னுருவாயுலகைநீங்கியுலகெல்லா
மலைவிறன்பேராணையினிறுவியாணைமாயன்முத
லலகிறேவர்தம்மாலுங்கடத்தற்கரிதாயமர்சிவன்ரு
டலையிற்பணிவாமெனத்தாழ்ந்துதாழ்ந்துவாயுப்பரவினனுல். (கஉ)

காலவளவுந்தேவாதிதேவராயுளும்
பகர்ந்தவத்தியாயமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-கூஅ.

---

* பரம் - பிரமதேவரது ஆயுண்முடிவு.

† பதினுன்கிந்திரர்களாவார்:— ஸ்ரீ விபச்சித்து சுசாந்தி சிவி விபு மனோசவன் புரந்தரன் மாவலி அற்புதன் சாந்தி விருடன் இருததாமன் திவற்பதி சுசி. விபுவை, வசு இரவி எனவும், புரந்தரனை, ஓசஸ்வி எனவும் பாடம் உண்டு.

# சத்தியாதியவ்வியத்தாந்தமுரைத்த அத்தியாயம்.

பரவிமுனிவர்முனம்படைக்கப்பட்டதேதங்கியாதினால்
விரியவிரிக்கப்படுமற்றறைவிரிந்தயாவும்யாதாமா
லொருவாதொடுக்கிக்கொள்வதுதானுரையின்றெமக்குவிரித்தென்னத்
தரையேமுதலாமுலகெல்லாந்தாங்கும்வாயுச்சாற்றினனால். (க)

ஆதியாயசிவனுழையிற்சத்தியுண்டாமதன்பின்ன
ரோதுமாயையுண்டாமற்றதன்பின்னுரைக்குமவ்வியத்தந்
தீதின்றாகத்தோன்றுமாற்சேர்ந்தசத்திதனிலுண்டாங்
கோதிலதீதசாந்திபதங்குறுகுமதன்பின்சாந்திபதம். (உ)

பின்னர்வித்தியாபதமுண்டாமாற்பிரதிட்டாபதந்தான்
மன்னுமதன்பினிவிர்த்திபதம்வருமாலதன்பின்வரன்முறையே
சொன்னேஞ்சிருட்டிகலையைந்துஞ்சொன்னமுறையிற்றிரிந்தியலின்
முன்னமுரைத்தசிருட்டியெலாமொருங்கேகெட்டுமுடிந்திடுமால். (௩)

அறிவொன்றில்லாவவ்வியத்தமுலககருத்தாவன்றுமாற்
சிறியவறிவாற்புருடனுஞ்சொல்கருத்தாவல்லன்றீதிலா
நிறைபுமறிவான்மிக்குயர்ந்துமாயாதென்றுநிலவியே
மறைகளுரைக்கப்படுசிவனேமாசில்கருத்தாவாகுமால். (௪)

மருவுபரார்த்தமிரண்டிறக்கில்வந்தங்கடையும்பிரளயந்தா
னுரியவாயகாரியங்கள்யாவுமொடுக்குமவ்வியத்தம்
பொருவில்புருடன்பிரகிருதியோடும்பொருந்திமற்றொன்றுந்
திரிவின்றாகிபுறைவனவன்றனக்குமேலாய்ச்சிவனுறைவான். (௫)

நிறையுந்தெண்ணீர்ப்பிரளயந்தானீங்கினீங்காதுறைசிவன்று
றுறையும்புருடன்பிரகிருதியிடத்தின்மாயையாலுற்றே
குன்றவில்பரிணாமத்தோடுபிரவத்தியினைக்கொடுத்திடுவான்
முறையேயதன்பினவ்வியத்தந்தன்னின்முழுதுமுண்டாமால். (௬)

உண்டாமென்றங்கத்துவாவெவைக்கும்பதியாயொருவனுய்த்
தண்டாதமர்ந்துதழைத்தபேருலகிலடங்காத்தலைவனுய்
விண்டேயலர்ந்தமலரவனுங்காணுவிண்ணேனடித்துணைக்கே
தொண்டாய்நின்றுவளிக்கிறைவன்றுதித்தேதலையாற்றெழுதனனல். எ

சத்தியாதியவ்வியத்தாந்தமுறைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கoரு.

---

## அந்தக்கரணுதியண்டாந்தமுற்பத்தி அத்தியாயம்.

---

தொழுதுபின்னுஞ்சொல்லலுற்ருன்ரேன்ருதுறையவ்வியத்தத்திற்
பழுதில்புத்தியகங்காரமனமிந்தியங்கள்பாற்படவே
மொழியுந்தன்மாத்திரைகளொடுபூதமெவையுமுளைத்தெழுமாவ்
வழுவாதேத்துமுத்தேவுமக்காலையினில்வந்துதிப்பார். (க)

வந்தேயுதித்தமூவர்க்குமாருநின்றமுத்தொழிலுஞ்
சந்தார்புளகமுலையுமையாடலைவனுயசிவன்ருனே
நந்தாவருளாலருள்புரிவானுடியுணர்வானுந்தெரியிற்
கந்தார்களிற்றினுரிபோர்த்தவவனேயெவர்க்குங்கடவுளே. (உ)

மன்னியுறையவ்வியத்தத்தின்மகத்தத்துவமுண்டாகுமாற்
பின்னேயதனின்மூவகையாமகங்காரங்கள்பிறக்குமா
லன்னமூன்றுண்முன்னேவைகாரிகமாமகங்காரந்தன்னிற்
பன்னிந்தியங்களோர்பத்துமனமுமுண்டாமெனப்பகர்வார். (ங)

தக்கதாயசாத்துவிகந்தழுவுமகங்காரத்தினிடை
மிக்கவாஞானேந்தியங்களோரைந்தினுக்கும்வீறினு
லொக்குங்கருமவிந்தியங்களோரைந்தினுக்குமனத்திணுக்குந்
திக்குமுதலாமதிட்டானதெய்வமுண்டாந்தெரித்திடிலே. (ச)

தண்டாதுறையுந்தமோகுணத்தைத்தழுவுமகங்காரத்தினின்று
முண்டாமொலியாகாயமதிலுண்டாமதனிலூறுண்டா

மண்டாதுலவுங்காற்றதனிலுண்டாமதனில்வருமுருவம்
விண்டாரதனிலனற்ரேன்றுமென்பருயர்ந்தமேலோரே. (௫)

வயங்குமதனில்வந்திடுமொலிரததன்மாத்திரையதனிற்
றயங்குமொலிநீருண்டாமாலதனினற்றந்தழைக்குமாற்
பயங்கொளுற்றந்தனினின்றும்பரந்தேகிடந்தபாருண்டா
மியங்குமின்றநிற்பனமற்றெவையுமிவற்றிலுண்டாமால். (௬)

புருடனேடுபிரகிருதிமேவப்பொருந்துமகான்முதலா
விரிபுமண்ணேயீருகமேவாநின்றதத்துவங்கண்
மருவுமண்டந்தனைப்படைக்குமதனின்மலரோன்வந்துதிப்பான்
றெரியிலவனேமுன்னனசிவனென்னத்தெரிப்பரால். (௭)

இவனேமுகநான்கினையுடையபிரமனுமெழில்வாய்த்தங்
குவனேயோராயிரந்தலைகளுள்ளனுயோங்குமாலாயு
மவனேயழனேருருத்திரனுயருள்சேரைந்துமுகம்பெற்று
நவைதீர்குணங்களொருமூன்றுமுறையேயடைந்துநண்ணுவனுல். (௮)

அந்தவண்டம்பதினுன்காமுலகையகத்துள்வாய்த்தமரும்
வந்தவதற்குப்பதின்மடங்காய்மறிநீர்சூழுமறிநீர்க்குச்
செந்தீயாங்கேபதின்மடங்காய்ச்சூழுஞ்செந்தீப்பதின்மடங்கா
யுந்தியுலவுங்காற்றதனையொழியாதென்றுஞ்சூழ்ந்திடுமால். (௯)

உலவையதனிற்பதின்மடங்காயொலிசேர்விசும்புவளைக்குமா
லலைவிலதனையகங்காரஞ்சூழப்படுமாலகங்கார
மலைவின்முகிமகான்சூழப்படுமான்மகானைவளைக்குமாற்
சொலவாங்குறையுமவ்வியத்தமென்றேமறைகள்சொல்லுமால். (௧௦)

இவ்வாறுயவண்டங்களனேககோடியெறிநீருட்
செவ்வேநின்றுங்குறக்காகிக்கிடந்தும்பொருந்துந்திசழ்ந்திவற்று
ளொவ்வாதுறையுமுத்தேவுமுறைவார்மன்னியுற்றிடவே
மைவ்வார்மிடற்றுச்சிவன்புரிவானென்றேவாயுவழங்கினனுல். (௧௧)

அந்தக்காணுதியண்டாந்தமுற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧௬.

வழங்கலோடுங்கற்பஙகண்மனுவந்தரங்கள்வந்திடையே
யெழுந்துதோன்றுஞ்சிருட்டிகளாங்கெய்துங்கொலைகளிவையெல்லாம்
விழைந்திங்கருளாலுரைத்தியெனமுனிவருரைப்பவிரிசடைமேற்
குழந்தைமதியமணிந்தோனைப்பணிந்துவாயுக்கூறினனால். (க)

முன்னாட்போனவவையெல்லாமுடியவுரைக்கிற்படனென்று
மிந்நாளுள்ளவாறறியவிசைப்பாமிதுதான்வராககற்ப
மன்னுவைவச்சுதபனுநன்குறைவான்மறிநீர்வந்தெழுந்து
பின்னுவிரிந்ததிரைக்கரங்கள்வீசிப்*பெருகிநின்றதால். (உ)

உரவுத்தெண்ணீரிடைமலரோன்மாயோனாகியுறங்குவான்
பரவிச்சனலோகத்துறைவோர்பணிந்துபணிந்துதுயிலெடுப்ப
விரைவிற்றுயில்விட்டெழுந்துலகைக்காணானாகிமிகப்புலம்பி
யரவச்சடையோன்றனைநினைந்தேயாழ்ந்தநிலமென்றறிந்தனனால். (ந)

அறிந்து ‡ கரியகேழலுருவெடுத்தாங்கலைநீரிடையாழ்ந்து
மறிந்தநிலத்தைக்கோட்டின்மிசைத்தாங்கிமுன்போல்வைத்திடலு
முறைந்தசனலோகத்தினுளோரொண்பூச்சொரிந்துதுதித்தனராற்
சிறந்தகேழலுருநீங்கிச்செழுந்தாமரைமேலடைந்தனன். (ச)

அயனானதற்பின்பாதலமோரேழும்நீர்புடையுடுத்தே
யியலுமண்ணோமுதலொருநான்குலகுமுன்போலெழில்வாய்ப்ப
முயலுமுயற்சியாற்படைத்துமுகிழ்ந்துவீங்குமுலையுமையாள்
¶ பயலனடித்தாமரைபோற்றிப்பணிந்தேமகிழ்ந்தாங்குறைந்தனனால். (ரு)

சுவேதவராகாவதாரவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉக.

---

* பெருகிநின்றது இதற்குமுந்தியகற்பமுடிவில்.

‡ இது சுவேதவராககற்பமெனப்படுதலின், கரியகேழல் என்பதற்கு வலியகேழலெனப் பொருள்கொள்க. ¶ பயலன்- நேர்பாதியன்.

## பலவகைச்சிருட்டியுரைத்தவத்தியாயம்.

மருவிப்படைக்கநினையுங்காற்றமஞ்சொன்மோகமாமோக
முறைசெய்தாமிச்சிரமந்ததாமிச்சிரமென்றோரைந்தாய்
நிரையிலவிச்சைதோன்றிற்றலவற்றினின்றவரைமுதலா
விரைவிலைந்துதோன்றிற்றலிவற்றல்வீறின்றெனநினைந்தே. (க)

பின்னும்படைக்கநினையுங்கால்விலங்கின்பெருக்குப்பிறந்ததுவான்
மன்னியதன்பின்மேலாயவானோர்பெருக்குவந்ததுவாற்
றுன்னியதன்பின்கீழாயமனிதர்பெருக்குத்தோன்றிற்று
லுன்னிலதன்பின்பேய்களொடுபூதம்வந்தேயுற்றனவால். (உ)

எவையுந்தோன்றுமுனந்தோன்றுமகத்தத்துவந்தானிதன்பின்னர்
நவையிறன்மாத்திரைகளொடுபூதநண்ணித்தோன்றுமா
லுவையின்பின்னரிந்தியங்களுண்டாம்புத்திபூருவமா
யிவைகண்மன்னும்பிரகிருதியிடத்திற்றோன்றியெய்துமால். (ங)

பின்னேநவிற்றற்காய்க்கிடந்தபெட்பார்குமரர்சிருட்டியினை
யின்னேயுரைப்பாமுகைவிரிந்தவெழிலொண்மலரின்வாழ்மறையோன்
முன்னாட்சனகன்சனந்தரன்சொன்முதியவறிவார்சனாதனன்சீர்
மன்னுவுறைந்துமருவுசனற்குமாரன்றிபுவைமகிழ்ந்தளித்தான். (ச)

தோற்றுமவர்தாம்படைப்பதனைவிழையாராகித்துளிநறவ
மூற்றும்விரைகால்கொன்றையணியொருவன்றனைத்தாளுள்ளிருத்திப்
போற்றுதவத்தின்றுறையொழுகிப்பொருந்தனோக்கிப்புனைமலரோ
னாற்றல்புரிந்தான்படைப்பதற்காவழியாதாயவருந்தவமே. (ரு)

புரிந்ததவத்தாற்பயனொன்றுங்காணானாகிப்புகைந்தழலச்
சொரிந்தகமலமலர்க்கண்ணீர்சொரிந்தநீரினிடைநின்றும்
விரிந்துபூதம்பலபேய்கடோன்றநோக்கிவிழைகலனாய்
வருந்திவருந்தியுள்ளாவிமாய்ந்தானந்தமலரோனே. (சு)

மாய்ந்தேகிடந்தமலரவன்றன்முகத்தின்மழுவாளவனெய்தி
யேய்ந்தேபதினோருருத்திரரைப்படைத்துப்படைமினெனவியம்பக்
காய்ந்தேயழலுமழுவலத்தார்கலுழ்ந்தங்கியையாதேயகல
வாய்ந்தேயவரையுருத்திரரென்றறைந்தாரறிவான்மிக்குயர்ந்தோர். (எ)

அதன்பினிறந்தவாவியினையளித்தங்கெழுதியெனவறையத்
ததைந்தமலரோன்றுயிலேற்றங்கெழுந்தானென்னத்தானெழுந்து
துதைந்தமலர்க்கணுனைக்கவிறையோன்றொடிக்கையாற்றடவி
முதிர்ந்தவறிவான்முன்போலப்படைப்பாயென்னமொழிந்தனனால். அ

விரியப்படைப்பாயெனலோடும்விழைந்துமலரோன்போற்றுவான்
மருவுமணஞ்சேர்ந்தகன்றுவிரி § மண்ணினுருவாஞ்சருவனு
யிரதமன்னித்தெண்ணீரினுருவாயுறையுமெழிற்பவனு
யுருவம்பொருந்திக்கனல்வடிவாயுற்றேயுறையும்பசுபதியாய். (கூ)

ஊறுயுலவையுருவாகியொழியாதுறையீசானனு
யாறுவொலியாய்வெளியுருவாயமர்ந்தேயுறையும்வீமனாய்
வீறுரொளிசேர்ந்திரவியுருமேவியுறையுமுருத்திரனாய்
மாறுத்திரைநீரமுதாகிமதியாயுறைமாதேவனாய். (க0)

உரைத்தற்கரியவியமானனுருவாயோங்குமுக்கிரனாய்
விரித்தற்குரியனாய்வேறுய்விளம்பலாகாத்தனிமுதலாய்த்
திருத்துமறிவாலறிபொருளேசெழுஞ்சேவடிப்போதென்றலைமே
லிருத்தியாள்வாயெனப்பரவியிறைஞ்சிப்படைக்கலுற்றனனால். (கக)

தகைசாறருமன்சங்கற்பன்மரீசிபிருகுத்தனிமறைகள்
புகனுவுடையவங்கிராப்போற்றுநின்றபுலத்தியன்சீர்
நிகரில்புலகன்கிரதுவொடுதக்கனிகழ்த்துமத்திரியோர்
துகளில்வசிட்டனெனுமிவரைத்துலங்கியுறையப்படைத்தனனால். கஉ

---

§ பிருதிவியைப் பவனெனவும் அப்புவைச் சருவனெனவும் கூறுவதும், பஞ்சப்பிரமவட்டமூர்த்தமுரைத்தவத்தியாயத்திலே அருளியவாறு கூறுவதும் உண்டு.

பொன்னார்கமலமலர்முகத்திற்புத்தேளிரையும்புயங்கடமின்
மன்னுவுறைதென்புலத்தவர்கடைமையும்வரம்பிலசுரர்தமைப்
பின்னும்புறத்துங்குறியதனின்மக்கடமையும்பெட்போடு
துன்னுமிகவுமகிழ்ந்துறையத்துகளின்ருகப்படைத்தனனால். (கந)

அந்தகாரத்திடைநின்றுமழனேர்வெய்யவரக்கரையும்
பைந்தாரணியுமியக்கரையும்பண்டோர்ந்துறைகந்தருவரையுங்
கொந்தாரழல்போல்விரிகுஞ்சிக்குறுத்தாட்பூசகணங்களையுந்
தந்தானிதழோராயிரஞ்சூழ்தண்ணங்கமலத்துறைவோனே. (கச)

பரிவொன்றில்லாத்தன்வயத்தபறவைகளையும்பசுந்தாமம்
விரைகான்மார்பிற்செம்மறியாட்டினையும்வெள்ளாட்டினைமுகத்தும்
பொருவில்வயிற்றுமிருவிலாப்புடையும்பொருந்துபசுக்களையு
மிருதாள்களினும்யானைமுதல்விலங்காமெவையும்படைத்தனனால். கரு

வல்லிகிழங்குமயிர்களினுங்கீழ்பான்முகத்தின்முதன்மறையுஞ்
சொல்லுமிரண்டாமறைதென்பால்முகத்துமேல்பாற்சுடர்முகத்தின்
மல்லன்மூன்றாமறையினையும்வடபான்முகத்தினான்காய
வெல்லையில்லாமறையினையுமெச்சங்களையும்வகுத்தனனால். (கசு)

படைப்போன்மெய்யிலுலகங்களெவையும்படைத்தான்படைத்தவற்று
மடுத்தேயுறையுமுயிர்வருக்கமுன்னாட்கற்பங்களில்வாய்ப்ப [ண்
வடுத்தேசெய்தகருமங்களெவையுமந்தவாதனைக
டொடுத்தேயிந்தக்கற்பத்துந்தோன்றப்புரிந்துநின்றிடுமால். (கஎ)

முன்னாட்கற்பங்களில்வகுத்தபடியேமுளரிநான்முகத்தோன்
மன்னுநின்றகற்பங்கடமிலுமுறையேவகுத்திடுவா
னிந்நாளெய்துருப்பருவம்போலெய்தும்பருவமெவைகளினுந்
துன்னுநிற்கும்பலவும்போற்றோன்றவெடுத்திங்குரைத்திடிலே. (கஅ)

மன்னப்படைச்சமலரவற்குத்தலைவான்வாயுமுகமாகுந்
துன்னுகதிர்கவிரவிமதிகண்களாகுஞ்சூழ்திசைகள்
கன்னமாகுந்திரைவேலைகவினவுறைகண்ணகன்ஞால
மன்னமுயர்த்தவாங்கவனுக்கறைபொற்கழற்காலாகுமால். (கக)

அன்னோன்முகத்திலருமறையோருதித்தார்தோளிலரசர்வந்தார்
மன்னுந்தொடையில்வந்துதித்தார்வணிகர்வாசமலர்த்தாளிற்
பின்னேயுதித்தார்பின்னவர்கள்பெட்பவுணரினெஞ்ஞான்றும்
பொன்னேரவன்றன்மேனியினிலுண்டாமெவையுமெனப்புகன்றான். ()

பலவகைச்சிருட்டியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கசக.

## பிரமவிட்டுணுவுற்பத்தியத்தியாயம்.

உருவத்தடந்தோள்களின்மாலையயனைப்படைத்தவுருத்திரன்றான்
மருவுங்கமலத்தோன்முகத்தில்வந்தவாறுவழங்குகெனப்
பொருவற்றுயர்ந்தமாமுனிவர்புகலவிந்தமண்ணேழும்
விரியப்பரந்தவானேழுந்தாங்குமுலவைவிளம்பினனால். (க)

மறைநான்முகத்தோனெடியாமுன்கேட்டேங்கேட்கவகுத்தபடி
யறைவாமழிபாமகேச்சுரன்றனிடத்திலமருமூவர்களு
முறையேயுதித்தாராங்கவர்கண்முன்னியொருவர்தமையொருவர்
நெறியாற்படைக்கவேண்டுமெனநிகழ்த்தற்கரியதவம்புரிந்தார். (உ)

புரியாவந்தமகேச்சுரன்றன்னருளாங்கடைந்துபுகன்றவரு
ளெரிநேர்மேனி * யுருத்திரனங்கிருவர்தமையும்படைத்தனனால்

---

* திரிமூர்த்திகளுள்ளே ஒவ்வொருவரும் மற்றிருவரையும் படைப்பரென்பதையும், திரிமூர்த்திபரன் சிவபெருமானேயென்பதையும் "அறுக்குமோர் கற்பத் தயனொரு கற்பத் தரியொரு கற்பத்தி லரன்முன், பிறப்பனுன் பான்மற் றிருவரை முன்னோன் பெற்றளித் திடுவன்மற் றிதனு, லுறப்பெறு முயர்ச்சி தாழ்ச்சிக ளொருவர்க் குள்ளதோ வில்லையென் றிவ்வா, றிறப்புறு மறைகண் முழுவது முணர்ந்தோ ரியம்பவ ரெம்பெரு மானே." எனவும், "தேவர்மூ வருக்குந் தலைமையொப் புமைதான் செப்புக வன்றிமற் றிவருண், மேவரு மேலோனுருத்திர னெனத்தான் விளம்புக வெந்தவா றேனுங், காவல நீயே யாவர்க்கு மேலாங் கடவுளென் பதுபெரு வழக்கே, போவுறு தலைகெ லாம்பணி செய்யு மொருவனீ யாகிநின் றனையே." எனவும் வரும் சிவதத்துவவிவேகச் செய்யுட்களானு முணர்க.

மருவார்மலரோனிருவரையும்படைத்தானொருகான்மாயவனும்
பரிவாலரனைநான்முகத்தோன்றன்னோடொருகாற்படைத்தனனால். ரு

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

மருவவிர்கொன்றைமாலைதாழ்செய்யவார்சடையண்ணலைமுன்னாட்
டிருமறுமார்பன்மேகமாய்வருடமாயிரஞ்சுமந்தனன்றிரியப்
பரவிவானவர்கள்கற்பகநறும்பூத்தூவியேபணிந்துமற்றதனைப்
பொருவறுமேகவாகனகற்பமெனநணிபுகன்றனரன்றே. (சா)

மகிழ்ந்ததன்பின்னர்மதிமுகிழணிந்தோன்மணிநிறமாயனுக்கன்பாற்
றிகழ்ந்திடப்படைக்கும்வகையெலாமறியத்தெருட்டினன்றெருட்டலு
லகைந்தபூந்துளபமாலைதாழ்மோலிபண்ணலுமகமகிழ்ந்தன்றே [மறிவா
முகைந்தலர்விரிந்தமலரவனோடுமுலகெலாமுறையினிற்படைத்தான்.

மன்னியமறையோன்மாயனைநோக்கியென்னொடும்வரம்பிலாவுல
கைத், துன்னிடப்படைத்தலுணர்ந்தனனுமையாள்பங்கினனருளென
த்துணிந்தே, பொன்மலருந்திநின்னொடுமுலகைப்படைப்பல்யான்புகு
தரவென்று, மின்மலர்சடையான்பொன்னடிநினைந்துமேதகுதவம்புரிந்
தனனால். (சு)

புரிதலுமந்தத்தவத்தினுக்கிரங்கிப்பொன்னெடுங்குன்றினைவாங்கி
வரிசிலையாகவளைத்தவன்வரலுமலரவன்வணங்கிநின்வலப்பாற்
பரிவுறவுதித்தேன்யானினதிடப்பாற்பங்கயக்கண்ணன்வந்துதித்தா[ன்.
னிருவருளவனேயுலகொடுமென்னைப்படைத்திடவிசைத்ததேனென்று

என்றுநீயவனோடுலகெலாம்படைக்கும்வகையினையெனக்கருளெ
ன்ன, மன்றலங்கோதைபங்கினனகைத்துப்படைப்பெலாம்வந்திடவழ
ங்கி, நின்றுயர்கயிலைநெற்றியேறினனுனிழல்விரிபசும்பொனுய்மலர்ந்த,
துன்றிதழ்க்கமலப்பொகுட்டில்வீற்றிருப்போன்சுடர்முடிமாயனைய
டைந்தான். (அ)

அலையெழவிரிந்தபாற்கடனடுவணலர்கதிர்ப்பரிதியோடிகலி
மலைவுறுமிருளைவாங்குபுவிழுங்கிமலர்கதிர்திசையெலாம்பரப்பி

நீலெபெறவமர்ந்தவிமானமூடமரர்நெருங்குபுசூழ்ந்துநின்றிறைஞ்சப்
பலதலைவிரிக்குநஞ்சுமிழ்பகுவாய்ப்பாப்பணைப்பள்ளியின்மிசையே. கூ

விட்டொளிர்மகுடகோடிபல்கோடிவெங்கதிர்ப்பரிதியின்விளங்க
வட்டவாய்த்திகிரிவலம்புரிசார்ங்கம்வயங்குசெந்தழலுமிழ்வடிவா
ளட்டியிருண்ணுங்கதையெனப்புகலுமண்ணலைம்படைபுறங்காப்ப
வெட்டுடனிரண்டாந்திசையிருள்கீறியிலகொளிப்பொன்னுடைதிகழ.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பத்திப்பைம்பூண்மணிமார்பின்மிளிரப்பசுந்தேனுடைந்தொழுகத்
தொத்திக்கிடந்தபூந்துளபத்தொடையறடந்தோண்மிசைத்துவள
முத்திற்பொலிந்தமுள்ளெயிற்றுமுளரிப்பொகுட்டுமடமாதுந்
தத்துதிரைநீர்மண்மகளுந்தளிர்மென்கரத்தாற்பதம்வருட. (கக)

அழியாயோகத்துயில்புரியுமவனோடடைந்தவலர்மலரோன்
மொழிவானென்னைநீவிழுங்கிமுன்னுட்படைத்தல்செய்தாய்வாய்
வழியால்விழுங்கியானுமுனைப்படைப்பேனென்றுமாயவனை
விழைவால்விழுங்கிப்புருவநடுவதனிலீன்றுவிட்டனனால். (கஉ)

ஈன்றகாலைநெஞ்சுருகியேத்துமன்பரல்லார்க்குத்
தோன்றுமுதல்வன்மதிருடித்தோன்றிநின்றவகைநோக்கிக்
கான்றவொளிசேர்மலர்மறையோன்கண்ணனோடுமடிவணங்கி
யான்றவறிவாற்றுதித்திடலுமண்ணலருளிமறைந்தனனால். (கங)

பிரமவிட்டுணுவுற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கடுச.

---

## உருத்திரோற்பத்தியத்தியாயம்.

---

மறைந்தானென்றுவாயுமுதல்வகுத்துவழங்கலுற்றனனாற்
சிறந்தகமலத்தோன்முன்னம்படைக்குஞ்செயல்கடெரிகலனு

யுறைந்தேயுயிர்த்துமிகவாடியுருகியயரும்வகைநோக்கித்
துறந்தோருணருஞ்சிவனருளத்தோன்றுகின்றானுருத்திரனே. (௧)

ஒருங்கேயோராயிரம்பரிதியுதித்ததென்னவொளிகான்று
திருந்தாநின்றதிருமேனிதிகழவெயிற்றிற்றீயவிடஞ்
சொரிந்தேயழலும்படநாகஞ்சுற்றித்தடந்தோள்களிற்கிடப்பக்
கரிந்தேதோன்றுமிடறிலங்கக்காதிலரவக்குழைதிகழ. (௨)

முன்னாஃபிறந்தமால்பிரமன்றலைகண்மூவாயிரங்கோடி
பொன்னந்தடந்தோள்களுமார்பும்பொலியப்புதுநாண்மலர்சிந்திப்
பின்னுந்திரைபாய்கங்கைநதிப்பெருக்கிற்கீற்றுப்பிளவுமதி
மன்னியலையுண்டீர்ஞ்சடிலமவுலிமிசையேமறைந்தொளிர. (௩)

வடவையுமிழுங்கண்ணுமுழவையதளாற்பொலிந்தவட்டுடைமேற்
படவெஞ்சினத்தபொறிநாகக்கச்சுவயங்கப்பாற்கடல்வாய்ச்
சுடுநஞ்சுமிழுமுத்தலைவேல்சுடர்பொற்கமலக்கரத்தொளிர
வடுவெங்கூற்றினுயிருண்டவம்பொற்கழற்காலழகெறிப்ப. (௪)

கயிலைவரைபோல்விடையேறிக்கண்மூன்றுடையோன்றோன்றுதலுஞ்
செயலற்றிருந்தநான்முகத்தோன்சென்றுமலர்த்தாள்பணிந்தேத்தப்
புயல்பற்றியபூங்கூந்தலாள்பங்கன்பொருவிறனைப்போல
மயலற்றொழியவிறவாதமன்னியுறைவோர்தமைப்படைத்தான். (௫)

படைப்பப்பிறப்போடிறப்பின்றிப்பரிவற்றுறைவோர்தமைப்ப டையேல், கடுத்தாழ்மிடற்றோயெனவணங்கக்கண்மூன்றுடையோனி வ்வாறிங், கடுப்பதன்றாலெமக்குநீயவ்வாறியற்றுகெனவியம்பி, விடுத் தேபடைப்பைமுனம்படைத்தோரோடும்விளங்கியுறைந்தனனால். (௬)

உருத்திரோற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௬0.

---

# உருத்திரன்வெளிப்படுமத்தியாயம்.

உறையுமலரோன்படைத்தனனூங்குப்படைத்தபடைப்பெல்லா
நெறியேமலிந்துவளர்ந்திடாவகைதானோக்கிநெய்யூட்டு
கறைவேனெடுங்கண்மகளிர்தமைக்கலந்தேபடைக்கவேண்டுமென
நறைதாழ்கூந்தல்பங்கினனைநினைந்துநவைதீர்தவம்புரிந்தான். (க)

தவநன்காகப்புரிந்திடுதற்கிரங்கித்தன்னேடலகிலாப்
புவனமெவையுமோர்வயிற்றிலீன்றருளிடப்பாற்பொலிந்திலங்கக்
கவனவிடையின்மீதேறிக்கடவுண்முதல்வன்றோன்றுதலு
மிவனேயெனையாளுடையானென்றிறைஞ்சியிறைஞ்சித்துதித்தனனால். (உ)

மன்னியெவர்க்குமாதேவனுவோய்நின்னைவணங்குவா
முன்னியறியுமகேச்சுரனுமுதல்வாநின்னைத்தொழுதிடுவா
மன்னைநிகர்க்குங்கலியாணியாவோயடித்தாமரைதொழுவா
முன்னிலெவைக்குமூலமாயுறைவோயுனதுதாள்பணிவாம். (ரு)

உறையுமாயையுடன்கூடியுறைவோய்நின்னைத்தொழுதிடுவா
நறைதாழ்மாலைமுடியமரர்நாடுமுதலேவணங்கிடுவா
நிறையுமுலகமெவற்றினுக்குந்தாயாய்நின்றோய்நினைத்தொழுவா
மறையுமந்தவுலகுருவாயமருமணங்கேயடிபணிவாம். (சு)

அழியாமுதலாயெஞ்ஞான்றுமமர்வோயறைபொற்கழல்பணிவாஞ்
சுழிவெண்டிரைபாய்கங்கையணிசுடர்பொற்சடையோய்தொழுதிடுவா
விழைவாலான்மாமூன்றினையும்*விளக்குமுமையேநினைப்பணிவாம்[ம்
வழியாரருளான்மற்றவற்றைப்புரக்குமயிலேவணங்கிடுவாம். (ரு)

நோக்காலுலகமெவற்றினையும்படைப்போய்தொழுவாநொடிவரையிற்
றீக்கான்றதனையெரிந்துவிடச்செய்வோய்செம்பொற்கழல்பணிவா
நீக்காதுலகெல்லாமன்னிநிறையுங்கொம்பேநினைத்தொழுவா
மாக்காநின்றதத்துவங்களுடையவணங்கேயடிபணிவாம். (சு)

உருத்திரன்வெளிப்படுமத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கசுசு.

---

* விளக்குமென்பதூஉம் பாடம்.

# மகளிருற்பத்தியத்தியாயம்.

என்றுதுதிப்பக்கயிலைவரையிருப்போனிடப்பான்மெனியெலா
மொன்றியுறையுமுமையவளைப்பிரிந்தான்பிரிந்தங்குற்றிடலு
நின்றமுதல்விதனைவணங்கிநீகரிறக்கன்புதல்வியாய்ச்
சென்றுபிறக்கவேண்டுமெனச்செழுந்தாமரைமேலயனுரைத்தான். (௧)

உரைப்பவெவர்க்குந்தாயாகியுறைவாள்புருவத்திடைநின்றும்
விருப்பாலொருபொற்கொடியளித்தாளவளைநோக்கிவிரைமலர்மே
லிருப்பான்சொன்னபடிநிற்றியென்றங்குரையாவிறைமுதல்வன்
மருக்கால்கூந்தல்வல்லியொடும்வடவான்கயிலைசென்றடைந்தான். (௨)

வடிக்குஞ்சுடர்கான்மழுவலத்தோன்வலப்பாலுதித்தமறைமுதல்வ
*னொடிக்கச்சுடர்கால்குருமணிப்பூணொலிமென்கூந்தன்முனமெய்தி
யடிக்கீழ்வணங்கித்தக்கனுக்குப்புதல்வியாகியடைதியெனத்
தொடிந்தோளவளுமற்றவற்குப்புதல்வியாகித்தோன்றினளால். (௩)

அன்றுமுதலாவளிபாடியலர்த்தவரும்புமுகைவெடித்து
மன்றல்கமழும்பசுந்தொடையல்வயங்குமார்பத்தெழின்மாந்தர்
பொன்றுஞ்சிளமென்முலைமடவார்ப்பொருந்திக்கலந்துதருபடைப்பே
நின்றுபெருகிநிறையுமெனநிகரிறவத்தோர்நிகழ்த்துவரால். (௪)

முறையேபகர்ந்தவிக்கதையைக்கேட்போர்முழுதுமுரைசெய்வோ
ரிறவாப்புதல்வர்தமையீன்றிங்கெந்நாள்களினுமின்புற்றே
யுறைவாரொன்னவேயியம்பியுலவைவேந்தனொழிவின்றி
மறையோர்நான்கும்வழுத்துபுகழ்மழுவாளிறைவனடிபணிந்தான். (௫)

மகளிருற்பத்தியத்தியாயமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௭௧.

---

* ஒடித்தல் - ஒளிசெய்தல்.

# பிரமவமிசவுற்பத்தியத்தியாயம்.

மழுவாளிறைவனடி பணிந்தவாயுமுதல்வன்வழங்குவான்
றழைநாண்மலரோன்சுவாயம்புமனுவுஞ்செய்யதளிர்போல
வெழில்சேர்மேனிச்சதரூபையென்னுமணங்குமாகியே
விழைவாலிருகூறுய்ப்பிரிந்தான்விண்ணோரொவரும்வியப்புறவே. (க)

மருவாரலங்கற்சுவாயம்புமனுவின்மணித்தோள்வரைபுல்லி
யரிசேர்நெடுங்கட்சதரூபையென்னுமம்பொற்கொடியிடையாள்
பிரியவிரதனுத்தானபாதனெனும்பேர்ப்புதல்வரையு
முறையாகூதிபிரசூதியெனுமாதரையுமுவந்தளித்தாள். (உ)

அலங்கனெடுவேற்சுவாயம்புமனுவாங்குறையாகூதியினைப்
புலன்கள்வழிபோகாவுளத்துவுருசிக்களித்தான்பொற்கொடியுங்
கலந்தங்கவனையெச்சனையுங்கன்னிக்கலிங்கமருங்கசைத்த
நலஞ்சேர்வனப்பார்தக்கிணையாநங்கைதனையுநயந்தளித்தாள். (ஙு)

பிறைபோனுதலாள்பிரசூதிதன்னைப்பெரியதக்கனுக்கு
முறையேயளித்தான்வரைநாணமுகிழ்ந்துவீங்குவனமுலையுங்
கறைவேலகற்றிக்குமிழ்மறிந்துகனபொற்குழைபாய்கருநெடுங்க
ணறனேர்கூந்தலிருபத்துநான்குமகளிர்தமையளித்தாள். (ச)

எழிலார்சிரத்தைதிருதிதுட்டிபுட்டிமேதை§யிலக்குமிபைங்
கழைபார்தடந்தோட்கிரியைபுத்திகன்னற்குதலையிலச்சைவபு
மழைநேர்கூந்தற்சாந்திசித்திகீர்த்தியெனும்வாட்கண்ணியரை
யழியாதோங்குதருமனுக்குமுறையேயன்புற்றளித்தனனல். (ரு)

கன்னற்குதலைக்கியாதியினைப்பிருகுமுனிக்குங்கவின்சதியைப்
பொன்னஞ்சடிலத்துருத்திரற்கும்பொருவிலெழிற்சம்பூதியினைப்
பன்னுமறைதேர்மரீசிக்கும்படைக்கண்மிருதியென்பாளை
மன்னியுறையுமங்கிராவென்பான்றனக்குமகிழ்ந்தளித்தான். (சு)

---

§ இலக்குமியை இரண்டாவது மனைவியாக்கி ஏனையரை
முறையேகொள்க.

பூத்தகொடிநேர் * பிரீதியினைப்பொருவின்மறைதேர்புலத்தியற்குங்
கூர்த்தவடிவேல்விழிக்கமையைக்கோதின்றுயர்ந்தபுலகனுக்கு
மார்த்ததொடையற்சந்ததியையாசொன்றில்லாக்கிரதுவுக்கு
மேத்துமெழிலாரனசூயைதனையத்திரிக்குமினிதளித்தான். (எ)

மைந்நேர்கரியகுழலூர்ச்சையென்பாடன்னைவசிட்டனுக்கும்
பைந்நேரல்குற்சுவாகையினைப்பைந்தாரழலின்கடவுளுக்கும்
பொய்ந்நேர்மருங்குற்சுதைதன்னைப்பொருந்ியுறைதென்புலத்தவர்க்கு
மெய்ந்நேரறிவாலுயர்தக்கன்விண்ணோர்புகழவளித்தனனால். (அ)

தருமன்மனையார் $ காமமுதற்றுவிலாதயசசீரும்
பொருவில்பதின்மூன்றையுமெவரும்போற்றிமகிழவீன்றனரா
லுமைசெய்கின்றவதன்மத்தினுரவுத்தடந்தோளிங்கிசைதான்
மருவிங்கிர்திமுதலாயநால்வர்தம்மைமகிழ்ந்தளித்தாள். (கூ)

சதிதன்றுதையாகியுறைதக்கன்சடைமேற்பிறைசூடும்
பதியாமிறைவன்றனையிகழ்ந்தபான்மையதனுற்றனதுள்ளங்
கொதியாவெழுந்துவெள்ளருவிகுளிர்முத்தெறிந்துகுதித்தொழுகு
மதிதோய்குடுமியிமவான்றன்மகளாய்வந்துதோன்றினளால். (கo)

பிருகுவென்பான்மனைவியாங்கியாதியெனச்சொல்பெண்ணணங்கு
கரியகூந்தவிலக்குமியாங்கன்னற்குதலைக்கன்னியையு

---

* பிரீதியைப் புலகருக்கும், கமையைக் கிரதுவுக்கும், சந்ததியைப் புலத்தியருக்கும், மனைவியாகக் கூறுவதும், சந்ததியைச் சன்னதி யெனப் பாடம் ஓதுதலும் உண்டு.

$ காமமுதலியன:—காமம் தர்ப்பம் நியமம் மகிழ்ச்சி இலாபம் சுருதம் தண்டம் சமயம் போதம் அப்பிரமாதம் விநயம் விவசாயம் க்ஷேமம் சுகம் யசசு எனப் பதினைந்தாகவும், இவற்றுள் தண்டம் சமயம் என்பனவற்றைக்கிரியையும், போதம் அப்பிரமாதம் என்பனவற்றைப் புத்தியும், மற்றையர் தனித்தனி ஒவ்வொன்றையும் ஈன்றனரெனவும் இலிங்கபுராணத்தும் கூர்மபுராணத்தும் கூறப்பட்டுள்ளன.

